[29th April 1960

SRI A. GOVINDASAMY: நாட்டைப் பிரிக்கிற கொள்கையை அடிப்படையாக வைத்திருக்கிற காரணத்தினுல் விளம்பரம் தரவில்லை என்று சொன்னுர்கள். விளம்பரம் தருவதற்கும் நாட்டுப் பிரிவினைக் கொள்கைக்கும் என்ன சம்பந்தம்? அந்த அடிப்படையில் நிராகரிக்கப்படுகிறது என்ருல், ஜன சக்தி நாட்டைப் பிரிக்க வேண்டுமென்று எழுதவில்லையே. அதற்கு ஏன் கொடுக்கவில்லை?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதுதான் சொன்னுர்களே வேட்டு வைக்கும் பத்திரிகை என்று. இது அதில் சேருகிறது. நாட்டுப் பிரிவினைக் கொள்கை உள்ள பத்திரிகைகளை நாட்டுப் பிரிவினை வேண்டுமென்று யார் யார் நினைக்கிறுர்களோ அந்த பகுதி மட்டும்தான் இதை வாங்கிப்படிக்கிறுர்கள். பொதுவாக மக்கள் வாங்கி அவைகளைப் படிக்காததால் அவைகளுக்கு அட்வர்ட்டைஸ்மென்ட் கொடுக்கப்படவில்லை.

*Basic Education Craft Equipment Stores*

*871 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ஆதாரக் கல்வி தொழிற்பயிற்சிக் கருவிகள் ஸ்டோர்கள் (Basic Education Craft Equipment Stores எங்கெங்கு எத்தனை இருக்கின்றன?

(ஆ) அவைகளைத் தணிக்கை செய்ய (Auditing and verification of stores) என்ன முறை கையாளுகிறது

(இ) அவைகளில் காணப்படும் குறைபாடுகள் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) to (இ) statement[a] is placed on the table of the House.

SRI R. KRISHNASWAMI NAIDU: 1959-60-ல் ஆரம்ப ஆதாரப் பள்ளியில் கிட்டத்தட்ட 9, 10 மாத காலமாக சென்ட்ரல் ஸ்டோர்களுக்கு பஞ்சு சப்ளை செய்யப்படாமல் ராட்டைகள் வேலை செய்யாமல் இருந்தன. அதற்காக என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM: முறையிலே சில தவறுகள் ஏற்பட்டிருந்தன. அவை இப்பொழுது சரி செய்யப்பட்டு பஞ்சு கொடுக்க ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

*Shenkottah High School*

*872 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Finance be pleased to state the present stage of the proposal to have agricultural land for the Shenkottah High School?

THE HON. SRI C. SUBRAMANIAM: The matter is under consideration.

---

a Printed as appendix III on pages 886–887 infra.